# உங்கள் கேள்வியும் வேதஆராய்ச்சியாளர் எம்.எஸ்.வசந்தகுமாரின் பதிலும்

**ஆதியாகமம் 2:17ல், விலக்கப்பட்ட கனியைப் புசிக்கும் நாளில் அவன் மரணமடைவான் என்று தேவன் தெரிவித்திருந்தார். ஆனால், அவன் அக்கனியைப் புசித்தவுடன் மரணமடையாதது மாத்திரமல்ல, 930 வருஷங்கள் உயிருடன் வாழ்ந்துள்ளான் (ஆதி.5:5). இதனால், தேவனுடைய கூற்று, அதாவது, விலக்கப்பட்ட கனியைப் புசிக்கும் நாளில் ஆதாம் மரணமடைவான் என்னும் எச்சரிக்கை பொய்யாகிவிட்டதா?**

விலக்கப்பட்ட கனியைப் புசிக்கும் நாளில் மனிதன் மரணமடைவான் என்னும் தேவனுடைய கூற்றும் (ஆதி.2:7), அக்கனியைப் புசித்த பின்பும் ஆதாம் நீண்ட காலம் வாழ்ந்துள்ளதும் (ஆதி.5:5) நமக்கு பெரியதோர் முரண்பாடாகத் தென்படுவதற்குக் காரணம், வேதாகமத்தில் "மரணம்" என்னும் சொல் எத்தகைய அர்த்தங்களுடன் உபயோகிக்கப்பட்டுள்ளது என்பதைப் பெரும்பாலான கிறிஸ்தவர்கள் அறியாமல் இருப்பதேயாகும். ஏனெனில், வேதாகமத்தில் மரணம் என்னும் சொல் மூன்று விதமான அர்த்தங்களுடன் உபயோகிக்கப்பட்டுள்ளது. இதனால், வேதாகமத்தில் மரணம் என்னும் சொல்லுக்கு இருக்கும் வித்தியாசமான அர்த்தங்களை அறிந்திருந்தால், தேவனுடைய கூற்றுக்கும் ஆதாமின் நீண்ட ஆயுளுக்கும் எவ்வித முரண்பாடும் இல்லை என்பதை அறிந்துகொள்வோம்.

வேதாகமத்தில் மரணம் என்னும் சொல், சரீர மரணம், ஆவிக்குரிய மரணம். நித்திய மரணம் என்னும் மூவித அர்த்தங்களைக் கொண்டுள்ளது.[1] மேலும், யூதசிந்தனையில் மரணம் பிரிவையே குறிக்கின்றது.[2] எனவே, மானிட சரீரத்தில் இருக்கும் ஆவியும் ஆத்துமாவும் சரீரத்தை விட்டுப் பிரிந்து செல்வதே சரீர மரணம் ஆகும்.[3] ஆனால், ஆவிக்குரிய மரணம் மனிதர் தேவனை விட்டுப் பிரிவடைவதாகும். இதனால்தான், தேவனோடு உறவற்ற நிலையில் இருக்கும் மனிதர்கள் அக்கிரமத்திலும் பாவத்திலும் மரித்தவர்களாக இருப்பதாக வேதாகமம் கூறுகிறது (எபே.2:1,5). எனினும், நித்திய மரணம், தேவனுடனான நிரந்தரப் பிரிவாகிய நரக ஆக்கினையாக உள்ளது. இது "அக்கினிக்கடலிலே தள்ளப்படும் இரண்டாம் மரணமாக வெளிப்படுத்தல் 20:14ல் குறிப்பிடப்பட்டுள்ளது.[4] (இதைப்பற்றிய விரிவான விளக்கத்திற்கு எனது "மரணத்தின் மறுபக்கம்" என்னும் நூலைப் பார்க்கவும்).

உலகின் முதல் மனிதர்களான ஆதாமும் ஏவாளும் தேவனுடைய கட்டளையை மீறி, விலக்கப்பட்ட கனியைப் புசித்தபோது, தேவன் எச்சரித்திருந்தபடியே அவர்கள் ஆவிக்குரிய

[1] M.Erickson, *Christian Theology*, p. 611.
[2] R.Rhodes, *Commonly Misunderstood Bible Verses*, p. 20.
[3] W.Grudem, *Systematic Theology: An Introduction to Biblical Doctrine*, p. 816; P.Enns, *The Moody Handbook of Theology*, p. 371; G.P.Duffield & N.M.Van Cleave, *Foundations of Pentecostal Theology*, p. 514.
[4] D.Campbell, W.Johnston, J.Walvoord, J.Witmer, *The Theological Wordbook*, p. 88.

பிரகாரமாக மரணமடைந்தனர். அதாவது, அவர்கள் தேவனைவிட்டுப் பிரிவடைந்தனர். இதனால்தான், தேவன் அவர்களைச் சந்திக்க வந்தபோது, அவர்களால் தேவனுடைய பிரசன்னத்திற்கு வரமுடியாதிருந்தது. தேவன் அவர்களிடத்திற்கு வந்தபோது அவர்கள் ஒரு மரத்திற்குப் பின்னால் ஒளிந்துகொண்டனர் (ஆதி.3:8). அதுமட்டுமல்ல, அதன்பின்னர் அவர்கள் தேவனுடைய பிரசன்னத்திற்கு செல்ல முடியாதபடி ஏதேன் என்னுமிடத்திலிருந்த தோட்டத்தில் இருந்து வெளியேற்றப்பட்டனர் (ஆதி.3:24). ஏனெனில், பாவம் தேவனையும் மனிதனையும் பிரித்துவிடுகின்றது (ஏசா.59:2). இதனால்தான், தேவ கட்டளையை மீறிப் பாவம் செய்த ஆதாமும் ஏவாளும் அவருடைய பிரசன்னத்தில் இருக்கமுடியாத நிலைக்குத் தள்ளப்பட்டனர்.[5] உண்மையில், இத்தகைய ஆவிக்குரிய மரணத்தைப்பற்றியே தேவன் ஆதியாகமம் 2:7ல் குறிப்பிட்டுள்ளார். அதாவது, விலக்கப்பட்ட கனியைப் புசிக்கும் நாளில் மரணம் சம்பவிக்கும் என்று தெரிவித்துள்ளார். மேலும், தேவன் சரீர மரணத்தைப்பற்றி இவ்வசனத்தில் குறிப்பிடாததினாலேயே, விலக்கப்பட்ட கனியைப் புசித்த பின்பும் மரணமடையாமல் இருந்த ஆதாம் 930 வருஷங்கள் வாழ்ந்துள்ளான் (ஆதி.5:5).

விலக்கப்பட்ட கனியைப் புசிக்கும் நாளில் ஏற்படுவதாகத் தேவன் குறிப்பிட்ட மரணம் சரீரப்பிரகாரமானது அல்ல என்பதை உறுதிப்படுத்தும் விதத்திலேயே, அக்கனியைப் புசித்த பின்னர் ஆதாமையும் ஏவாளையும் தேவன் ஏதேன் என்னுமிடத்திலிருந்த தோட்டத்திலிருந்து வெளியேற்றும் செயல் உள்ளது. ஏனெனில், ஆதாமும் ஏவாளும் விலக்கப்பட்ட கனியைப் புசித்த பின்னர் அவர்கள் குடியிருந்த தோட்டத்திலிருந்து அவர்களை வெளியேற்றியதற்கான காரணம், அவர்கள் அங்கிருக்கும் ஜீவவிருட்சத்தின் கனியைச் சாப்பிட்டு என்றென்றும் உயிரோடிருந்து விடக்கூடாது என்பதை ஆதியாகமம் 3:17 அறியத்தருகின்றது. ஏனெனில், தோட்டத்திலிருந்த ஜீவவிருட்சம் மனிதர்களுக்கு ஜீவனைக் கொடுக்கும் ஆற்றல் உடையதாகவே இருந்தது.[6] இதனால்தான், பாவத்தின் பின்னர் ஆதாமும் ஏவாளும் ஜீவவிருட்சத்தின் கனியைப் புசித்து என்றென்றும் மரணமடையாமல் இருந்துவிடுவார்கள் என்பதற்காக, அவர்கள் அக்கனியைப் புசித்துவிடாமல் இருப்பதற்காக, அவர்களை அம்மரம் இருந்த தோட்டத்திலிருந்து வெளியேற்றும் தேவன், அவர்கள் அத்தோட்டத்திற்குள் செல்லமுடியாதபடி அதற்கு காவலும் போட்டார் (ஆதி.3:22-24).

உண்மையில், தேவன் மனிதரையும் ஏனைய உயிரினங்களையும் உருவாக்கியபோது அவைகள் மரிக்கக்கூடிய நிலையிலேயே அவற்றை அவர் சிருஷ்டித்துள்ளார்.[7] "தேவனுடைய சுவாசத்தின் மூலம் மனிதன் உயிர்வாழக் கூடியவனாய் மாறினாலும், ஜீவவிருட்சத்தின் கனியைச் சாப்பிடுவதன் மூலமே அவனுடைய வாழ்வு தொடர்ந்திருக்கக்கூடிய நிலையை அடைந்திருக்கும்.

---

[5] M.Erickson, *Christian Theology*, pp. 613-614.
[6] A.P.Ross, *Creation and Blessing: A Guide to the Study and Exposition of Genesis*, p. 123; R.K.Hughes, *Genesis: Preaching the Word Commentary*, p. 54; G.J.Wenham, *Genesis 1-15: Word Biblical Commentary Volume 1*, 62; G.Ch.Aalders, *Genesis Volume 1: Bible Student's Commentary*, p. 88; K.M.O'Connor, *Genesis 1-15: Smyth & Helwys Bible Commentary*, p. 51; H.M.Morris, *The Genesis Record: A Scientific & Devotional Commentary on the Book of Beginnings*, p. 87; C.J.Collins, *Genesis 1-4: A Linguistic, Literary, and Theological Commentary*, p. 115.
[7] J.McKeown, *Genesis: The Two Horizons Old Testament Commentary*, p. 33; N.M.Sarna, *Genesis: The JPS Torah Commentary*, pp. 18-19; A.Dickin, *A Scientific Commentary on Genesis 1-11*, p. 65.

இல்லையென்றால் தேவன் இத்தகைய ஒரு மரத்தை உருவாக்கியிருக்க மாட்டார்."[8] இதனால், உலகின் முதல் மனிதர்களான ஆதாமும் ஏவாளும் விலக்கப்பட்ட கனியைப் புசிக்காமல், ஜீவவிருட்சத்தின் கனியைப் புசித்திருந்தால் அவர்கள் சரீரப்பிரகாரமாக மரணமடையாமல் இருக்கும் நிலையை அடைந்திருப்பார்கள். ஆனால், அவர்கள் விலக்கப்பட்ட கனியைப் புசித்ததினால் தேவன் குறிப்பிட்டவிதமாக ஆவிக்குரிய பிரகாரமாக மரணமடைந்ததோடு, பிற்காலத்தில் சரீரப்பிரகாரமாகவும் மரித்தனர்.

[8] Wallace, *The Eden Narratives*, p. 103.